திருவாமாத்தூர் கௌமாரசபை வெளியீடு எண்-67

உ

சிவமயம்

திருவாமாத்தூர்

# ஸ்ரீ அபிராமேசுவரப் பெருமான்

# நவரத்தினத் திருப்புகழ்

ஆசிரியர்:

மகான் - வண்ணச்சரபம்

அருள்திரு. தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்.

ஷையூர்

முருகதாசர் செந்தமிழ்க் கழகத்தின்

சார்பில் நடைபெற்றுவரும்

வார வழிபாட்டு விழாவின்

ஒன்பதாவது ஆண்டு மலர்.

22-3-64.

உ

குருவே துணை

# முன்னுரை.

இந்நூல் திருவாமாத்தூர் ஸ்ரீ அபிராமேசுவரப் பெருமான் மீது பாடப் பெற்ற ஒன்பது திருப்புகழ்ப் பாக்களைக் கொண்டதாகும். கோமேதகம், நீலம், பவளம், புருடராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்பன நவரத்தினங்களாகும். இந்நூற்பாக்கள் அவை போல் ஒன்பது என்ற எண்ணிக்கையாலும் அவை எவ்வாறு அளவற்ற பெருமையானதும், சிறப்பினதுமாக இருக்கிறதோ அதுபோல இந்நூற் பாடல்கள் அரிய சந்த கடைகளை உடையதாலும், அளவற்ற கருத்துகளைக் கற்கும் தோறும், கற்கும்தோறும் தருவதாலும். அபிராமேசுவரப் பெருமானின் ஒப்புயர்வற்ற பெருமைகளைக் கூறுவதாயுள்ள தாலும் இந்நூல் நவரத்தினத் திருப்புகழ் என்றபெயரைப் பெறுவதாயிற்றென்க. இந்நூல் இதுவரைவெளிவந்திலது.

முருகப்பெருமான்மீது ஸ்ரீ அருணகிரிநாதர் திருப்புகழ்ப் பாக்கள் பலபாடியுள்ளார். ஆனால் சிவபெருமான்மீது திருப் புகழ்ப்பாக்கள் யாரும் பாடியிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால் இந்நூலாசிரியர் இவ்வூர்ப் பெருமான்மீது ஒன்பது திருப்புகழ்ப் பாக்களைப் பாடியுள்ளார். மேலும் சிதம்பரம் நடராசப்பெருமான் மீது இந்நூலாசிரியர் தில்லைத்திருவாயிரம் என ஓர் அரிய நூல் இயற்றியுள்ளனர். அதில் நடராசப்பெருமான் மீதும் நூறு திருப்புகழ்ப்பாக்கள் அருளியுள்ளனர். இதைப்போலவே திருவரங்கத் திருவாயிரம் என்ற நூலிலும் திருமால்மீது நூறு திருப்புகழ்ப் பாக்கள் பாடியுள்ளனர். இவைபோற் பல.

இந்நூலை இயற்றியருளியவர் மகான் - வண்ணச்சரபம் அருள்மிகு - தண்டபாணி சுவாமிகளாவர். இவர் 1839ல் திருநெல்வேலியில் தோன்றி இளமையிலேயே முருகன் அருள் பெற்று தமிழ்க் கவிகள் பாடும் தன்மை வாய்ந்து, புலவர்புராணம், தமிழலங்காரம், அறுவகை இலக்கணம் போன்ற அரிய நூல்களும், சமய பேதச்சார்பற்ற தோத்திர வகையில் பழனித் திருவாயிரம், தில்லைத் திருவாயிரம், திருவரங்கத் திருவாயிரம், ஏழாயிரப்பிரபந்தம், போன்ற பல நூல்களுமாக எண்ணிலாத பாடல்களைத் தம் திருக் கரம் கொண்டே பனையோலைச் சுவடியில் எழுதினர். பல தலசேவை செய்து, செல்லுமிடமெல்லாம் சீவகருணைக் கொள்கையை வளர்த்து, தவவேடம் கொண்டு, பலருக்கும் அருட்குருவாகத் திகழ்ந்து இறுதியில் விழுப்புரத்தை அடுத்த திருவாமாத்தூர்ச் சிவதலத்தில் எல்லை தாண்டா விரதமுடன் தங்கித் தவம்புரிந்து 1898-ல் ஞான சமாதி கொண்டுள்ளனர்.

ஒன்பது பாக்களை உடைய இவ்வரிய நூலின்பயனையும், சிறப்பினையும் அறிந்து முருகதாசர் செந்தமிழ்க்கழகத்தின் சார்பில் நடைபெற்று வரும் வார வழிபாட்டு ஒன்பதாவது ஆண்டு விழாவின் நினைவு மலராக வெளியிடுகிறோம். இந் நூலிலுள்ள பாக்களைப் படித்துப் பொருளுணர்ந்து ஸ்ரீ அபி ராமேசுவரப்பெருமான் திருவருளைப் பெற்றுப் பயனடைய வேண்டுகிறோம்.

இன்னணம்

விழுப்புரம் } வார வழிபாட்டுக் குழுவினர்,
22—3—64 } திருவாமாத்தூர்.

உ

சிவமயம்.



# திருவாமாத்தூர்
# ஸ்ரீ அபிராமேசுவரப் பெருமான்
# நவரத்தினத் திருப்புகழ்.

---

காப்பு – வெண்பா.

சிவனுக்(கு)ஆ மாத்தூர்த் திருப்புகழ்ப் பாடல்
நவரத்தி னப்பெயரால் நாட்டப் — பவள
நிறத்தானை மாமுகனும் நெட்டிலை வேற் சேயும்
திறத்தாற் புரந்திட லுண் டே.

நூல்.

*தனனாதாத் தாத்தன தானன - தனதான*

அடியார்தாட் பூத்திர ளேகமழ்
துகளால்மாற் றேற்றம தாயவிர்
அணிமாருச் சீர்த்தலை பாழ்பட-விடலாமோ
அயில் வேல்போற் போர்க்கெழு கார்விழி
மடவார்வேய்த் தோட்புணர் ஆசையில்
அமிழ்வார்பாட் டேற்றரு ளீகுவ-திலையேயோ
கொடியபார்பாற் பார்ச்சுமை தோய்வது
தவிர்வான்வேட் டேக்கம தாய்நனி
குலைவேனீற் றுற்றின மூழ்கிடல்-அவமேயோ

குருகூடக் கூத்தொனி சால்கொடி
புனைசெய்போற் சீர்த்தினி வேறுடல்
கொளல்தீர்வீட் டார்த்தர்க ளோடுற -
மடியூார்சாக் காட்டுடல் நீறிய [அருள்வாயே
பொடிசேர்தீப் போற்றிகழ் வாய்!கையில்
மழுமான்ஏற் றுற்றல்கொள் மால்விடை-
வயமாவாய்த் தூர்த்தகு ணலயம் [இவர்வானே
அனையான்மேற் பாய்ச்சல்கொள் மாயனை
வனையார்மேற் றேற்கவராடலும் -
செடியார்காட் டுக்கம தோடுறை [உடையானே
பவரேபோற் போய்ச்சம ராடிய
தினம்வானூர்க் கோச்சுத ஞலடி - படுவோனே
சிவனே! போற் றூர்க்குள மாதர்கள்
தொழவோர்ஓட் டாற்பலி தேர்பவ!
திருவாமாத் தூர்க்கர சாகிய - பெருமானே.

2

*தந்தன தத்தனத் தானத் - தனதான*

அஞ்சன வெற்பெனத் தோணிக்
கண்கள்சி வத்திடக் கோபித்
தந்தகன் எற்பிடித் தேகிச் - சிதையாதே

அனையான் - இரணியன்
மாதர்கள் - தாருகாவன முனிவர் மனைவிகள்

ஐங்கணை யைத்தொடுத் தேவிப்
பெண்களை விட்டுருக் கார்வத்
தங்கச னிக்குவிற் போர்மிக் - கழியாதே
கஞ்சம லர்ப்பொகுட் டோனெட்
டங்கையெ டுத்தினிப் பாரிற்
கண்டவ யிற்றினுட் போகப் - படையாதே
கந்தம கப்பெருக் கார்பொற்
குஞ்சர வத்திரத் தானைக்
கந்தனை யொக்குமெய்ச் சீரிட் - டருள்வாயே
கொஞ்சமுர் வெட்கம்வைக் காமற்
பைங்கிளி யொப்பெனப் பேசிக்
கொஞ்சுமொ ருத்திபிற் போமத்-தினம்வானோர்
கும்பிட மற்றையர்ச் சாடச்
செண்டுபி டித்தகைப் பாலற்
குன்றமெ னக்கொடுத் தாளத் - துணிவோனே
பஞ்சவ னுக்குவப் பாகச்
சென்றப ரித்திரட் காதற்
பண்புறும் விப்பிரற் கோர்சொற் -பகர்வோனே
பண்டைந லத்தினர்க் கேமிக்
கின்பம ளிக்கும்வித் தாரப்
பம்பைந திக்கரைக் கோயிற் - பெருமானே

# 3

*தனன தனந் தானனத்தத் - தனதான*

அருணையில் அன் போடெனைக்கைக்
கிளியெனநன் கோதியிச்சித்
தலைதருபண் பேதுமற்றுத்—துயராலே
அழவிடும்நின் பாலனுக்குப்
பலகவிமுன் பாடிஎய்ப்புற்
றருள்பெறநின் சீர்சொல்பெட்பைத்—
தருணமிதன் றேவுனட்பிற் [தெரியாயோ
பெரியவரின் றேசகத்திற்
சகலருநொந் தேதவிக்கச்—செயலேனே
தவளநெடுங் காலையிற்பச்
சௌவுமைநின் பாலிருக்கச்
சரவணனங் கூடுவக்கத்—திகழ்வாயே
பொருணையுங் காமவெப்பிற்
றலைமையுமொன் றேர்தமிழ்ச்சொற்
புலவன் விடுந் தூதுரைக்கைக்—கிசைவோனே
புடவைகவர்ந் தோர்மரத்திற்
பலர் தொழஅன் றேறுபச்சைப்
புயலொருபெண் பாலுருப்பெற்—றணைதோளா
கருணையில்சண் டாளரைச்செற்
றிடுநமன்என் றுடுமிச்சைக்
கனமருள்நம் பா!நடிக்கச் - சலியானே

கரிபுலிசிங் காதிதத்தப்
புனல்வருபம் பாநதிப்பொற்
கரையிலுறுங் கோவிலுக்குட் – பெருமானே

## 4

*தனனு தாத்தாத் – தனதானு*

கணைபோல் வாட்போற்-றிகழ்கூர் நோக்காற்
கடிவார் காற்கீழ்ப் – பணியாதே
கலிநோ யாற்றீக்-குணர்நோர் போய்ப்போய்க்
கதைநூல் வாய்ப்பாட் – டறையாதே

இணைசே ராக்கூற் றுவனுர் வேற்றுக்
கினில்மாய் வாய்போய்ப் – பிறவாதே
இமையா தார்க்காத்-தருள்கூர் மாற்றேட்
டெழிலார் தாட்பூத்-தருவாயே

துணையா ளுட்போற்-றிலன்வீழ் காற்காற்
றுணைசோ ராக்காற் – கடிதீவாய்
துடிமான் ஆற்றுக் – கனல் சேர்நாற்றேட்
சுடராய் ஆர்த்தார்த்-துதைவோனே

திணைதோ றேற்றேற்-றயில்வாய் போற்றுச்
சிறியோர் பார்க்காப்-பொருளாறுய்
தெளிநீ ராற்றுற்-கவினுர் நாற்பாற்
றிருவா மாத்தூர்ப்-பெருமானே.

# 5

*தானத்தாத் தானனதானன - தனதான*

வேல்போற்கூர்த் தேதிகழ் சீர்விழி
யார்பாற்போய்க் காமவி டாய்கொடு
வீணுட்போக் காதுனே யேமிக – நினையேனே
விருப்பாற் றேவர்தம் வாழ்வையும்
நாய்வாய்ச்சோற் றேடினை யாவுணர்
மேலோர்ப்போற் றுதிகழ் தீவினை–தவிரேனே
மால்போற்போர்த் தானவர் வேரற
வேதாக்காட் டாயிரம் ஆடிடல்
மாறுச்சீர்க் காசைகொள் மாதவ–முயலேனே
வாணுட்கூற் றுலொழி யாமலுர்
வேளாற்றீக் காதல்நல் காமலும்
வான்மாட்டேற் றேறியெ னேர்தினம் –
கால்போற்சீர்த் தேதிரி மூவெயில் [வருவாயே
நீறாய்ப்போய்ப் பார்களி கூரனூர்
காலாற்கோட் டாடக வார்சிலை– உடையானே
காயாப்பூப் போலொளிர் மாயவன்
நால்வாய்ப்பார்ப் பான்நனி தேடுபு
காணப்பீட் டோடுயர் தீமலை - வடிவானாய்
ஆல்போற்சீர்த் தோர்மரம் வேறின்மை
தேர்வார்காத் தேசிக னாகிஅ
ராஆர்பூத் தாரறு காதியொ–டவிர்வோனே

ஆசாற்ருப் பாவல ராமவர்
தாமாப்போற் றீடுகு லாவிய
ஆமாத்தூர்க்கோயிலின் மேவிய-பெருமானே

## 6

*தாஞ தானன தய்யன–தனதாஞ.*

தீயே யாமெனும் வெய்யசொல்
ஓயா தேபகர் புல்லர்கை
சேர்சோ ருதிய வௌவிடல்-ஒழியேனே
தேனே ராகிய நல்லிசை
பாடா தார்பலர் கொள்சில
சீர்மே லாசைகொ டொல்கியு-மெலிவேனே
பேயே போல்நிகழ் தையலர்
மோகா வேசம தொல்லுபு
பீடார் மாதவ வல்லபம்-அழிவேனே
பேதா பேதமல் இல்சுக
ஞாஞ சாரமும் எள்ளவில்
பேரு நீடருள் வெள்ளமும்-அருள்வாயே
நாயே நேர்வெகு சள்ளிடும்
வாதே மேலிடு கல்வியர்
நாவா லோதரும் வைபவம்-உடையோனே
நாடா தேயிகழ் கைதவ
ஞவாழ் நாளுயர் தில்லையில்
நாஞ ளாம்வகை செய்திடும்-இறையோனே

ஆயே யாய்உல குய்வகை
தேறுர் தீயெதிர் கொல்லலும்
ஆகா தேயெனும் ஒள்ளியர்-துணையாவாய்
ஆரு தாரமும் உள்ளுணர்
தூயோர் சேகர மல்கிய
ஆமா தாபுரம் வைகிய-பெருமானே

**7**

*தானு தனதன தாந்தன தன்னன-தனதானு*

ஆகா நெறியிடை போந்தறம் நண்ணுநர்
சீசீ யெனவுயிர் சோர்ந்தழும் என்மனம்
ஆறு முறைசெய வேண்டிடல் நின்னுளம் -
[அறியாதோ
ஆடா தியின்நிண மாந்திடு புன்மையர்
மேனுள் சிலவரம் வாங்கின ரென்னவும்
ஆழா ழியின்நடு மாந்தர்கள் சொன்மொழி-
[நிசமேயோ
பாகா கியருசி தோய்ந்தசில் வண்ணமிந்
நாள்பா டினும்அடி தேய்ந்துயர் முன்னையர்
பாவால் மகிழ்தகை வாய்ந்திலை இன்னணம் -
[உறலேனோ
பாழாய் உலகழி வாம்படி வன்மைசெய்
தீயோர் அடியொடு மாய்ந்திட என்னெதிர்
பால்நேர் விடைமிசை ஊர்ந்துமை தன்னொடு
[-வருவாயே

நாகா பரணபு ராந்தக! விண்ணவர்
மேல்நீ றியபொடி ஆர்ந்தவிர் வெண்ணிய
நாதா! மலைமகள் காந்த!ஒ ரைம்முகம்-
[உடையானே
ஞான கரமறை நான்குணர் நுண்மையர்
ஆனோர் தலையணி பூண்டவ பொன்மகிழ்
நாரா யணர்பலர் தாம்புனை கண்மலர்-
கூகா வெனஅழு தேங்குற இன்முறை [கழ்பாதா
யோர்பால் விழுபிணை மாம்பிறை யின்மகர்
கோடா துறுகதி யாஞ்சிவ சண்மத-முடிவானாய்
கோலா கலமலி வேந்தர்கள் தம்மிறை
ஆமோர் தயரதன் மாண்சுத னன்மைகொள்
கோமா துருபுரம் வாழ்ந்திட மன்னிய-
[பெருமானே

# 8

*தானதன தானதந்த-தனதானா*

காரணமெ னுவுன்மைந்தன்
மூதுமொழி நாடிநொந்து
காயுமென்வி சாரமொன்றும்-அறியாயோ
காதலறி வீனமென்று
தேறியுமென் மீதெதிர்ந்து
காமன்அம ராடுகின்ற-விதம்யாதோ

பூரணமதா நிறைந்த
நீயெனள வேமறைந்து
போதன்முறை யோஇரங்கி-விடைமீதே
போககவு மாரியுங்கு
கேசனுமொர் பாலிருந்து
போதமகிழ் கூரவந்துன்-அருள்தாராய்
நாரணனும் வேதம்நன்கு
தேர்பிரம தேவனும்பொன்
நாகநக ரோனு நம்பும்-இருபாதா
நாலுமுனி வோர்களுங்கல்
ஆலடியி லேவணங்கும்
நாளிலொரு ஞானவிஞ்சை-மொழிவோனே
வாரணம தோடுசெங்கண்
வீறுபுலி கோரசிங்க
மாயமுனே நாள்வதஞ்செய்-வலியோனே
வானநதி யோடுகங்கை
காவிரியு மானுபம்பை
மாதைநகர் வாழவந்த-பெருமானே

## 9

*தானன தானன தானன-தனதான*

நாணுத வேசியர் மாயையி
லேமூழ்கி ஆடக மால்கொடு
நாய்போல வூர்தொறு மேகவும்-இசைவேனோ

நானேது நீயென லேதன
வீண்வாது பேசிடு மூடரை
ஞானுநு பூதியு ளாரென - நினைவேனோ
சேஞுடர் கோவென வேமுனம்
வாழ்சாரு வேயென தாமொரு
தேகாபி மானியெ ஞுவுணர் - தலும்வீணே
சீராடும் நாள் புலி யூரிலென்
வாயோது மாறது நீசெயல்
தீதாய்வி டாதடி யாரிடை - விடுவாயே
கோஞுக பூடண னேயடி
யார்தூதும் ஆனவ னேபல
கோடாநு கோடிந லாடல்கள்-உடையானே
கோபாலர் சேகர ஞுவரு
மாயோனை யாளும காமுனி
கோடாது நீடிட வேவிரல் - அமுதீவாய்
ஆஞுன பாதியும் மாதுரு
வேனயான பாதியும் ஆர்தரும்
ஆகார னேமழு மானுடன் - அணிதோளா
ஆசாப சாசைவெல் சீர்முனி
வோர்கோடி பேர்வழி பாடுசெய்
ஆமாதை மாநகர் மேவிய - பெருமானே.

*தெய்வமே துணை.*

நூற்பயன்

*தனனத் தனத் தனத்தன–தானத்தான.*

அலமற் றிகற்றி ரட்கெம–ணமீட் டார்வார்
அறயிக் கஉத் தமர்க்கொரு–தாய்போற் சூழ்வார்
தலமுற் றமுத் தமிழ்ப்புல–வோர்கோப் போல்வார்
சலசத்த ணைச்செயித்துமெ–யாம்வீட் டேய்வார்
இலகற்பு தக்கதைப்பொலி–வால்வேற் சேய்தாள்
இணைவைத்த நற்சிரத்தெனே–ஆள்பீட் டால்ஆல்
நலமிக்க பொற்புடைத்திரு–ஆமாத் தூரான்
நவரத்தி னத்திருப்புகழ்–நூல்கேட் போரே.

*முற்றிற்று.*

வெண்பா

திருமாதை யூரில் திகழ்அபிரா மேசப்
பெருமான்எம் முத்தாம் பிகைத்தாய் – பெருமாண்பு
சேரருளைப் பெற்றுவக்கச் செந்தமிழாற் போற்றிடுவோம்
பாரதனில் இந்நாட் பணிந்து

குருபாதமேகதி

